[25th January 1961]

**SRI P. G. MANICKAM:** ஸார், கனம் அமைச்சர் அவர்கள் கூடிய சீக்கிரம் இதுபற்றி கவனித்து விளக்குகள் போடுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்படுவதற்கு பரிசீலனை செய்து இருப்பதாகத் தெரிவித்தார்கள். ஆகவே அதை கூடிய சீக்கிரம் கவனித்து செய்வதற்கு சர்க்கார் முன்வருவார்களா என்று அறிய விரும்பு கிறேன்.

(பதில் இல்லை.)

### *Cauvery Irrigation Areas*

* 173 *Q.*—**SRI K. R. NALLASIVAM:** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) காவிரிப்பாசனப் பிரதேசங்களில் தண்ணீர் விடுவது கட்டுப்படுத்தப்பட்டுள்ளதா?

(இ) ஒவ்வொரு நிலத்துக்கும் எத்தனை நாட்களுக்கு ஒரு முறை தண்ணீர் கிடைக்கும்?

**THE HON. SRI P. KAKKAN:** (அ) No, Sir. There had been no restriction in supply in any of the areas fed by Cauvery old ayacut viz., Cauvery delta, ayacut under Tiruchi channels, etc., New ayacuts under the New Kattalai High Level Canal and Pullambady Canal are being supplied only when surplus flows are available in the Cauvery.

(இ) Does not arise.

9-00 p.m. **SRI K. R. NALLASIVAM:** தண்ணீரைக் குறைத்துப் பாய்ச்சுவதன் மூலம் ஒன்று, விளைச்சலை அதிகப்படுத்த முடியும். மற்றொன்று, அப்படி செய்யப்படுவதால் இன்னும் அதிகப்படியான நிலங்களை சாகுபடிக்கு கொண்டு வர முடியும். ஆகவே காவேரியில் தண்ணீரைக் கட்டுப்படுத்தி, அதனால் தஞ்சாவூரிலே இன்னும் அதிகப்படியான விளைச்சல் செய்ய சர்க்கார் ஏற்பாடு செய்யுமா என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

**THE HON. SRI P. KAKKAN:** தஞ்சாவூரிலே அப்படித் தண்ணீரைக் கட்டுப்படுத்தி கொடுப்பதற்கு ஏற்பாடுகள் செய்து கொண்டுதான் வருகிறார்கள் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**SRI R. SRINIVASA IYER:** ஸார், தண்ணீரைக் குறைத்து விடுவதைப்பற்றி பட்டுக்கோட்டை அரசினர் ஆராய்ச்சிப் பண்ணையில் ஐந்து வருஷங்கள் ஆராய்ச்சி செய்து, தண்ணீரை அப்படி ரொம்பவும் குறைப்பதினால், பயிர்கள் கெட்டுப் போகின்றன. அதோடு விளைச்சலும் குறைகிறது என்று கண்ட விஷயம் சர்க்காருக்குத் தெரியுமா? ஆகையினாலே, விளைச்சலுக்கு முக்கியமாக உள்ள தண்ணீரைக் குறைக்காமல், தண்ணீர் குறைந்து விடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்யாமல், இப்போது இருக்கும் அளவிலேயே தண்ணீர் விட சர்க்கார் முயற்சி செய்வார்

25th January 1961]

THE HON. SRI P. KAKKAN : அப்படி ஆராய்ச்சி செய்த நிகழ்ச்சிகள் எல்லாம் இப்போது என்னிடத்தில் இல்லை. தனியாக கேள்வி போட்டால் சொல்கிறேன்.

SRI K. R. NALLASIVAM : ஆராய்ச்சியையெல்லாம் எடுத்துக் கொள்ளாமல், நடைமுறையிலே உள்ளதை எடுத்துக் கொள்வோம். இப்போது கீழ்ப் பவானிப் பிரதேசத்திலே ஐந்து நாட்களுக்கு ஒருமுறை தண்ணீர் விடப்பட்டு, அதன்படி ஒரு லட்சம் ஏக்கராக்கள் பயிர் செய்யப்பட்டு வருகிறது. அதே மாதிரி ஏற்பாட்டிலே மீதியுள்ள எல்லாப் பாசனங்களுக்கும் தண்ணீர் கொடுத்து, ஏராளமாக சாகுபடி செய்வதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா என்று கேட்க விரும்புகிறேன்?

THE HON. SRI P. KAKKAN : சில இடங்களிலே தண்ணீர் ஜாஸ்தியாக வேண்டியிருக்கும். சில இடங்களில் தண்ணீர் சீக்கிரமாக உறிஞ்சப்பட்டு விடும். ஆகவே, அதை வைத்துக் கொண்டு, கீழ்ப் பவானியையும், காவேரி டெல்டாப் பிரதேசத்தையும் ஒப்பிட்டுப் பேசுவது நல்லதல்ல என்று கூறுகிறேன்.

SRI P. G. KARUTHIRUMAN : கீழ் பவானி அணைக்கட்டு பிரதேசத்தில் புஞ்சைக்கான தண்ணீர் விடுவதிலே அருமையான நஞ்சை அதிகமாக உற்பத்தி ஆகிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா? தஞ்சாவூரைப் போல் நான்கில் ஒரு பங்கு தண்ணீரில் அதிகமாக உற்பத்தி பெருகி இருக்கிறது என்பதை சர்க்கார் அறிவார்களா?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் பகுதியில் நெல் அதிகமாக விளைகிறது என்பது எனக்கு நன்றாகத் தெரியும்.



*Minor irrigation works*

*174 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to place on the Table of the House a copy of the Minor Irigation Works to be undertaken in the Coimbatore district under the Third Five-Year Plan?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The principal schemes that will be undertaken in the Third Five-Year Plan are :—

(1) Special Minor Irrigation Programme;

(2) Desilting-*cum*-Reclamation Scheme;

(3) New Well Subsidy Scheme (Revived).

Other Minor Irrigation Schemes such as Hire Purchase Scheme for the distribution of electric motors, scheme for the sinking of filter points etc., will also be continued.